

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமானுஜாய நம:

# அருளிச்செயல் அநுபவம்

## இடைப்பகுதி



முதற்பாகம்

பதிப்பாசிரியர் :

ஸ்ரீ உ. வே. வேளுக்குடி

கே. வரதாசாரியர்

1988

முதற் பதிப்பு 1988

பிரதிகள் 1000





This Book is Published with the Financial Assistance of TIRUMALA TIRUPATI Devasthanams under their Scheme **"Aid to Publish Religious Books."**

புத்தகம் கிடைக்குமிடம் :

ஸ்ரீ K. வரதாசாரியர்
15, தம்புசெட்டி தெரு
சென்னை-1
தொலைபேசி : 512683

அச்சிட்டோர் :

இளங்கோ அச்சுக்கூடம்
166, R. H. ரோடு
மயிலாப்பூர்
சென்னை-4
தொலைபேசி 74121

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

அருளிச்செயல் அநுபவம்

# பரத்வாதி பஞ்சகம்

## முன்னுரை

திருவஷ்டாக்ஷரம்

"மாநாதீநா மேய ஸித்தி:" என்பர். ப்ரமேயம் ஸித்திப்பது ப்ரமாணத்தாலேயிறே. ஆதௌ வேதா: ப்ரமாணம் என்கிறபடியே மூலப்ரமாணம் நிரபேக்ஷப்ரமாணம் அபௌருஷேய ப்ரமாணம் வேதம். இஃது வேதம் என்றும் வேதாந்தமென்றும் வேதாந்த ஸாரம் என்றும் மூன்றாகப் பிரியும்.

வேதத்திலே கூறப்பட்ட தர்மம் கர்மமாகும். வேதார்த்த விசாரம் கர்ம விசாரம் செய்கிறார் ஸ்ரீஜைமினி பகவான். இது கர்ம மீமாம்ஸையான பூர்வமீமாம்ஸை. வேதாந்தங்களிலே கூறப்பட்ட தர்மம் பக்தி ரூபாபந்நஜ்ஞாநம். வேதாந்தார்த்த விசாரம் செய்கிறார் ஸ்ரீவேதவ்யாஸ பகவான். இது உத்தரமீமாம்ஸை—வேதாந்த ஸாரம் ரஹஸ்ய த்ரயமாகும். இது தன்னில் கூறப்பட்ட தர்மம் ஸாக்ஷாத் தர்மமான பகவான். "ராமோ விக்ரஹவாந் தர்ம:" "க்ருஷ்ணம் தர்மம் ஸநாதநம்" என்றுநின்றதிறே. வேதார்த்தமான கர்மமும் வேதாந்தார்த்தமான பக்தியும் தர்மம் எனப்படுவதே பகவத் ஸம்பந்தத்தாலேயிறே. அவ்யவஹித தர்மம் பகவானே. ரஹஸ்யத்ரய விசாரம் ரஹஸ்யத்ரயமீமாம்ஸை எனப் படும். கர்மமீமாம்ஸை பதினாறு அத்யாயங்கள் கொண்டது ஜைமினி கர்த்ருகம். முதற் கண் பன்னிரண்டு அத்யாயங்களில் கர்ம விசாரமும் மேலில் நான்கு அத்யாயங்களில் தேவதா விசாரமும் செய்கிறார் ஜைமினி. இது தேவதா காண்டம் எனப்படும். இது காசக்ருத்ஸ்ந ப்ரகாசிதமாகையால் காசக்ருத்ஸ்நீயம் எனப்படுகிறதத்தனை. இத்தேவதா காண்டமும் கர்ம காண்ட சேஷமாகையால் கர்ம காண்டம் என்றே கூறப்படும். ஆகையாலேயிறே ஸ்வாமி எம்பெருமானார் ப்ரஹ்மஸூத்ர வ்யாக்யாநாரம்பத்தில், "அத—கர்ம விசாராநந்தரம்" என்றருளிச் செய்தார்—"தேவதா விசாராநந்தரம்" என்றருளிச்செய்திலர். மேலில் நான்கு அத்யாயங் கள் ப்ரஹ்மமீமாம்ஸை—மேலில் நான்கு அத்யாயங்களும் ஒன்று

சேர்ந்து ஒரே மீமாம்ஸையாகும். வேதாந்த விசாரம் செய்த வ்யாஸர் பக்தி ரூபாபந்நஜ்ஞாநமான வேதாந்த விஹித தர்மத்தை விசாரிக்கிறார் ஆயினும் சாரீரகத்தில் ப்ரஹ்மஜிஜ்ஞாஸா'' என்று ப்ரதிஜ்ஞை பண்ணினார். பகவானே ஸாக்ஷாத் தர்மம் என்பது அவர் திருவுள்ளத்தில் உள்ளேயுறையும் அர்த்தமே. அது தன்னை சாரீரகத்தில் வ்யக்தமாக அருளிச்செய்யாமல் பக்தியான உபாயத்தை மூன்றும் அத்யாயத்திலும் முக்தியான உபேயத்தை நான்காமத்யாயத்திலும் ஸ்பஷ்டமாக வருளிச் செய்தார். ''அதாதோ தர்மஜிஜ்ஞாஸா'' என்ற கர்மமீமாம்ஸாதிம ஸூத்ரமே க்ருத்ஸ்நமீமாம்ஸா சாஸ்த்ர ப்ரதிஜ்ஞா ஸூத்ரம் என்னும் நம்பூர்வர்களாலே கூறப்பட்டுள்ளது. பகவான் ஒருவனேயிறே ப்ராப்யமும் ப்ராபகனும் ஆவான். ''உபாயோ பேயத்வே ததிஹ தவ தத்வம்நது குணௌ'' என்றாரிறே ஸ்ரீபராசரபட்டர்.

அவனுடைய உபாய உபேயத்வத்தை ஸாவ்யக்தமாக ஸுஸ்பஷ்டமாகக் கூறுமதிறே நாராயணபதம். தத்கடிதமான திருமந்திரமும் தத்விவரணமான த்வயசரம ச்லோகங்களுமிறே ரஹஸ்யத்ரயம். இதுவே வேதாந்த ஸாரம். இது தன்னில் பரமாத்மா சேஷீ சரண்யன் ப்ராப்யன் என வறுதியிடப்பட்டுள்ளான்.

இந்த ரஹஸ்யத்ரயத்தை உபதேசிக்கு மவனே ஆசார்ய பதத்துக்கு ஸாக்ஷாத் வாச்யார்த்தமாகிறான்.

நேரே ஆசார்யன் என்பது ஸம்ஸார நிவர்த்தகமான பெரிய திருமந்திரத்தை உபதேசித்தவனை (315) என்று ஸ்ரீவசநபூஷணம் கூறுகிறது

''இத்தைச் சொல்லவே அவற்றினுடைய உபதேசமும் தன்னடையே சொல்லிற்றும். ஆகையால் இது ரஹஸ்யத்ரயோபதேசத்துக்கும் உபலக்ஷணம்'' என்று பெரிய ஜீயர் வ்யாக்யாநமும் அத்ராநுஸந்தேயம். யுவ்யஞ்ஜயந்தம் மநும் தம் தத்ப்ராயம் சத்வயமபி விதந் ஸம்மத: ஸர்வவேதீ'' என்று அர்த்த பஞ்சாதிகாராரம்பத்தில் தேசிகனும் அருளிச் செய்தார். வேதாந்த ஸாரமான இந்த ரஹஸ்யத்ரயத்திலும் வைத்துக் கொண்டு பெரிய திருமந்திரம் முதல் ரஹஸ்யம். முதற் கண் அறிய வேண்டிய ஸ்வஸ்வரூபத்தையுள்ளபடி தெரிவிக்கிறதாகையாலே ப்ரதமரஹஸ்யம். ''தஸ்மை வ்யாபக முக்யாய மந்த்ராய மஹதே நம:'' என்றருளிச்செய்தார். தேசிகன் அறியவேண்டும் அர்த்தமெல்லாம் இதுக்குள்ளேயுண்டு. மற்றெல்லாம் பேசிலும்நின் திருவெட்டெழுத்து'' (8.10:3) என்றருளிச் செய்தார் கலியன். முமுக்ஷுஜ்ஞாதவ்ய ஸகலார்த்த

ப்ரதிபாதக மிறே திருவெட்டெழுத்து. இதினுடைய விவரணம் மேலில்ரஹஸ்யத்வயம். இம்மூன்றும் வேதாந்த ஸாரம். திருமந்திரத்தை பதரியில் நரனுக்கு நாராயணன் உபதேசித்தான். த்வயத்தை ஸ்ரீவிஷ்ணு லோகத்தில் பகவான் பெரிய பிராட்டிக்கு உபதேசித்தான். சரமச்லோகத்தை கீதாசார்யன் அர்ஜுநனுக்குபதேசித்தான். இம்மூன்றையும் ஒரு சேர உபதேசித்தான் ஸ்ரீரங்க நாச்சியார்க்குத் திருவரங்கத் தெம்பெருமான். ஆகையால் குருபரம்பரையில் ப்ரதமாசார்யன் திருவரங்கனே—''லக்ஷ்மீநாத ஸமாரம்பாம்'' என்றநுஸந்திக்கப் படுகிற லக்ஷ்மீநாதன் திருவரங்கனே யென்பர் நம்பெரியோர். ஆழ்வார்களருளிச் செய்த நாலாயிரமும் அவனைப் பற்றியதே— ''வடிவுடைவானோர் தலைவனே'' என்னும் பரத்வமும், ''கடலிடங் கொண்ட கடல் வண்ணா'' என்னும் வ்யூஹமும் ''கட்கிலீ'' என்னும் அந்தர்யாமித்வமும் ''காகுத்தா கண்ணனே'' என்னும் விபவமும் ''வண் திருவரங்கனே'' என்ற திருவரங்கனுக்கேயிறே. ரஹஸ்யத்ரய உப்தேஷ்டா திருவரங்கன். ரஹஸ்யத்ரய விவரணம் அருளிச் செயல் நாலாயிரமுமாகும். அருளிச் செயல்களுக்கு விஷயமே திருவரங்கன். பரத்வாதி பஞ்சகமும் திருவரங்கனுக்கே யுள்ளது.

இனி திருவரங்கனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்ட நாலாயிர திவ்ய ப்ரபந்தத்தில் பரத்வாதி பஞ்சகம் கூறப்பட்ட விடங்களை விரித்தநுபவிப்போமாக.

சென்னை,
1-8-88.

வித்வஜ்ஜநவிதேயன்
கி. வரதாசார்யன்.

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

நடாதூர் அம்மாள் என்று ஸுப்ரஸித்தரான
ஸ்ரீவாத்ஸ்ய வரதாசார்ய ஸ்வாமி யருளிச்செய்த

# பரத்வாதி பஞ்சகம்

வந்தேஹம் வரதார்யம் தம் வத்ஸாபிஜந பூஷணம் ।
பாஷ்யாம்ருதப்ரதாநாத் ய: ஸஞ்ஜீவயதி மா மபி ॥

1. உத்யத் பாநு ஸஹஸ்ர பாஸ்வர பரவ்யோமாஸ்பதம் நிர்மல-
ஜ்ஞாநாநந்தகந ஸ்வரூப மமலஜ்ஞாநாதிபிஷ் ஷட் குணை: ।
ஜுஷ்டம், ஸூரிஜநாதிபம் த்ருத ரதாங்காப்ஜம் ஸுபூஷோஜ்ஜ்வலம்
ஸ்ரீபூஸேவ்யமநந்த போகி நிலயம் ஸ்ரீவாஸுதேவம் பஜே ॥

2. ஆமோதே புவநே ப்ரமோத உத ஸம்மோதே ச ஸங்கர்ஷணம்
ப்ரத்யும்நம் ச ததாநிருத்தமபி தாந் ஸ்ருஷ்டி ஸ்த்திதீ சாப்யயம் ।
குர்வாணாந் மதிமுக்யஷட்குண வரை: யுக்தாந் த்ரியுக்மாத்மகை:
வ்யூஹாதிஷ்டித வாஸுதேவமபி தம் க்ஷீராப்தி நாதம் பஜே ॥

3. வேதாந்வேஷண மந்தராத்ரி பரண க்ஷ்மோத்தாரண ஸ்வாச்ரித-
ப்ரஹ்லாதாவந பூமிபிக்ஷண ஜகத் விக்ராந்தயோ யத்க்ரியா: ।

துஷ்ட க்ஷத்ர நிபர்ஹணம் தசமுகாத்யுந் மூலகம் கர்ஷணம்
காலிந்த்யா:, அதிபாப கம்ஸ நிதநம் யத்க்ரீடிதம் தம் நும: ॥

4. யோ தேவாதிசதுர்விதேஷ்ட ஜநிஷு ப்ரஹ்மாண்ட கோசாந்தரே
ஸம் பக்தேஷு சராசரேஷு நிவஸந்நாஸ்தே ஸதாந்தர் பஹி: ।
விஷ்ணும் தம் நிகிலேஷ்வணுஷ்வணுதரம் பூயஸ்ஸு பூயஸ்தரம்
ஸ்வாங்குஷ்டப்ரமிதம் ச யோகிஹ்ருதயேஷ்வாஸீநமீசம் பஜே ॥

5. ஸ்ரீரங்க ஸ்த்தல வேங்கடாத்ரி கரிகிர்யாதௌ சதேஷ்டோத்தரே
ஸ்த்தாநே, க்ராம நிகேதநேஷு ச ஸதா ஸாந்நித்ய மாஸேதுஷே ।
அர்ச்சா ரூபிண மர்ச்சகாபிமதித: ஸ்வீகுர்வதே விக்ரஹம்
பூஜாம் சாகில வாஞ்சிதாந் விதரதே ஸ்ரீசாய தஸ்மை நம: ॥

6. ப்ராதர் விஷ்ணோ: பரத்வாதி பஞ்சக ஸ்துதி முத்தமாம் ।
படந் ப்ராப்நோதி, பகவத் பக்திம் வரதநிர்மிதாம் ॥

# பரத்வாதி பஞ்சகம்

## முதற்பாகம்

## விஷய ஸூசிகை

பக்கம்.

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# அருளிச்செயல் அநுபவம்

## பரத்வாதி பஞ்சகம்

### திருவஷ்டாக்ஷரம்

### நர நாராயணனுய் அறநூல் விரித்தது.

நாவாயிலுண்டே நமோ நாரணு வென்று
மூவா துரைக்கு முரையுண்டே - மூவாத
மாக்கதிகண் செல்லும் வகையுண்டே
என்ஞெருவர் தீக்கதிக்கண் செல்லும் திறம். பொ. 95

### திருவஷ்டாக்ஷராநுஸந்தானம்

எட்டுமெட்டு மெட்டுமாய் ஒரேழுமேழுமேழுமாய்
எட்டுமூன்று மொன்றுமாகி நின்றவாதி தேவனை
எட்டினய பேதமோடு இறைஞ்சி நின்றவன்பெயர்
எட்டெழுத்து மோதுவார்கள் வல்லர்வானமாளவே.
தி. ச. வி. 77

மூன்றெழுத்ததனை மூன்றெழுத்ததனுல்
மூன்றெழுத்தாக்கி மூன்றெழுத்தை
ஏன்று கொண்டிருப்பார்க்கிரக்கம் நன்குடைய
எம்புருடோத்தமனிருக்கை
மூன்றடி நிமிர்த்து மூன்றினில் தோன்றி
மூன்றினில் மூன்றுருவானுன்
கான்தடம்பொழில் சூழ் கங்கையின்கரைமேல்
கண்டமென்றுங்கடிநகரே. பெரியாழ்வார். 4. 7. 10

பேசுமின்திருநாம மெட்டெழுத்தும் சொல்லி நின்று
பின்னரும்
பேசுவார் தம்மையுய்யவாங்கிப் பிறப்பறுக்கும்
பிரானிடம்

வாசமாமலர் நாறுவார் பொழில்சூழ்தரு முலகுக்-
கெல்லாம்
தேசமாய்த் திகழும்மலை திருவேங்கடமடைநெஞ்சமே!
கலி. 1. 8. 9

மற்றெல்லாம் பேசிலும் நின்திருவெட்டெழுத்தும்
கற்றுநான் கண்ணபுரத்துறையம்மானே. கலி. 8 10. 3

## திருமந்திரம் போதிக்கும் 7 தத்துவங்கள்

1) தேஹமே ஆத்மா என்ற ப்ரமம் நீங்குதல்
2) தான் ஸ்வதந்த்ரனென்னும் கொள்கை நீங்குதல்
3) தேவதாந்தரங்களுக்கு அடிமையாகாமை
4) பேற்றின் பொருட்டுத் தன் முயற்சி தவிர்தல்
5) உறவல்லாதாரை உறவினராகக் கொள்ளாமை
6) ஐம்புலனாசை யொழித்தல்
7) பாகவத சேஷத்வம்-ப்ரபந்நன் அநுஷ்டிக்க வேண்டுவது.

இவை ப்ரணவத்தில் மகாரத்தாலும், சதுர்த்யந்தமான அகாரத்தாலும், உகாரத்தாலும், நம: பதத்தாலும், நாராயணாய என்ற சரமபதத்தில் ப்ரக்ருத்யம்சமான நாராயண பதத்தாலும், ஆய என்ற வ்யக்த சதுர்த்தியாலும் சாப்தமாகத்தேறும். பாகவதசேஷத்வம் நம: பதத்தில் ஆர்த்தமாகத்தேறும்.

"அல்வழக்கு ஒன்றுமில்லா அணிகோட்டியர்கோன் என்றாரிறே பெரியாழ்வார்.

"ப்ரக்ருத்யாத்ம ப்ராந்தி: கலதி சிதசில்லக்ஷணதியா
ததா ஜீவேசைக்ய ப்ரப்ருதிகலஹ: தத்விபஜநாத்!
அதோ போக்தா போக்யம் ததுபய நியந்தேதி நிகமை:
விபக்தம் ந: தத்வத்ரயமுபதிசந்தி அக்ஷததிய:"
(ரஹஸ்யத்ரயஸாரம் தத்வத்ரய சிந்தநாதிகாரம்)

தத்வத்ரயவாதம் ஶாஸ்த்ர ஸம்ப்ரதாய ஸித்தம்.
திருவஷ்டாக்ஷர ப்ரமேயமே தத்வத்ரயம்.

ஆத்ம தத்வமான ஜீவனுக்கு விரோதியான ப்ரக்ருதியான அசிதம்சத்தைக் கழித்துத் தருமதிறே பகவத் ப்ரஸாதம். இஷ்டமான மோக்ஷஸுகத்தையளிப்பதும் இதுவே இவன்பண்ணும் ப்ரபத்தி வ்யாஜமாத்ரமாகும். அத்ருஷ்டத்வாரகமிறே மோக்ஷம் இராமாநுசமதத்தில் அங்கீகரிக்கப்பட்டது.

"மயர்வறமதிநலம் அருளினன்...அவாவற்று வீடு பெற்ற குருகூர்ச் சடகோபன்" என்றிறே ப்ரபந்நகார்த்த்யம்.

இவையித்தனையும் மூலமந்த்ரார்த்தமிறே

## நாராயண பரத்வம்

நான்முகனை நாராயணன் படைத்தான்
நான்முகனும்தான் முகமாய்ச் சங்கரனைத்தான்.
படைத்தான். நான். தி. 1

நான்முகன் திருவந்தாதியும் திருச்சந்த விருத்தமும் பகவத் பரத்வத்தையே பண்ணியுரைக்கும்.

ஆறு சடைக்கரந்தான் ......
வேறொருவர் இல்லாமை நின்றனை எம்மானை.
நான். தி. 4

தமராவார், யாவர்க்கும் தாமரை மேலாற்கும்
அமரர்க்கும் ஆடரவத்தாற்கும், அமரர்கள்,
தாள்தாமரை மலர்களிட்டிறைஞ்சி மால்வண்ணன்
தாள்தாமரையடைவோ மென்று. நான். தி. 91

"புறம் தொழா மாந்தரை (தேவதாந்தர பண்ணுதவர்களை)க் கண்டால எப்படி நடந்துகொள்ள வேண்டுமென்று யமகிங்கரர்களுக்கு யமன் கட்டளை"

திறம்பேன்மின் கண்டீர் திருவடிதன் நாமம்
மறந்தும் புறந்தொழா மாந்தர்
இறைஞ்சியும் சாதுவராய்ப் போதுமின்களென்றான்
நமனும் தன் தூதுவரைக் கூவிச்செவிக்கு.
நான். தி. 68

### பரத்வ ஸ்த்தாபநம்

போதின் மங்கை பூதலக்கிழத்தி தேவியன்றியும்
போதுதங்கு நான்முகன் மகனவன்மகன் சொலில்
மாதுதங்கு கூறன் ஏறதூர்தியென்று வேதநூல்
ஓதுகின்றதுண்மையல்லதில்லை மற்றுரைக்கிலே.
திரு. ச. வி. 72

### எல்லாம் நீயே

நீயேயுலகெல்லாம். நான். தி. 20
வானுலவு...திருமாலகைப்பு. நான். தி. 37
பாட்டும் முறையும். நான். தி 76

இனியறிந்தேன் காரணன் நீ
கற்றவை நீ
கற்பவை நீ
நற்கிரிசை காரணன் நீ
நன்கறிந்தேன் நான் நான். தி. 96

### ஸர்வரக்ஷகன் எம்பெருமானே

இமயப்பெருமலைபோல் இந்திரனார்கிட்ட
சமயவிருந்துண்டு ஆர்காப்பார் சமயங்கள்
கண்டானவைகாப்பான் கார்க்கண்டன் நான்முகனோடு
உண்டானுலகோடுயிர். நான் தி. 87

### "ஸகலமும் உன் ஸ்வரூபத்துக்குள்ளே ஒடுங்கியது."

தன்னுளே திரைத்தெழும் தரங்கவெண் தடங்கடல்
தன்னுளே திரைத்தெழுந்து அடங்குகின்றதனமைபோல்
நின்னுளே பிறந்திறந்து நிற்பவுந்திரிபவும்
நின்னுளேயடங்குகின்ற நீர்மைநின்கணின்றதே. தி.ச.வி.10

சொல்லினால் தொடர்ச்சி நீ சொலப்படும் பொருளும் நீ
சொல்லினால் சொலப்படாது தோன்றுகின்ற சோதிநீ

சொல்லினல் படைக்க நீ படைக்க வந்து தோன்றினர்
சொல்லினல் சுருங்க நின்குணங்கள் சொல்லவல்லரே.

திரு. ச. வி. 11

ஊனின் மேய ஆவி நீ
உறக்கமோடுணர்ச்சி நீ
ஆனின்மேயஐந்தும் நீ
அவற்றுள்னின்றதூய்மை நீ
வானினேடுமண்ணும் நீ
வளங்கடற்பயனும் நீ
யானு நீ யதன்றி யெம்பிரானு நீ யிராமனே

திரு. ச. வி. 94

ஆழாத பாரும நீ
வானும் நீ
காலும் நீ
தீயும் நீ
நீரும் நீ யாய்நின்ற நீ நம். பெ. தி. 11

## சமணர் பௌத்தர் கண்டனம்

அறியார்சமணர் அயர்த்தார் பவுத்தர்
சிறியார்சிவப்பட்டார் செப்பில்-வெறியாய
மாயவனை மாலவனை மாதவனை யேத்தாதார்
ஈனவரே யாதலாமின்று. நான். தி. 6

பேரான பேசப்பெறுத பிணச்சமயர் பேசக்கேட்டு
ஆசைப்பட்டாழ்வார் பலர். நான். தி. 14

இடமாவதென்னெஞ்சமின்றெல்லாம், பண்டு
படநாகணை நெடியமாற்கு - திடமாக
வையேன் மதிசூடி தன்னேடு அயனைநான்
வையேனுட் செய்யேன் வலம். நான். தி: 66

புலையறமாகிநின்ற புத்தொடு சமணமெல்லாம்
கலையறக்கற்ற மாந்தர் காண்பரோ கேட்பரோதாம்

திருமாலை 7

எம்பெருமானுர் கூரத்தாழ்வான் ஐதிஹ்யம் காண்க.

வெறுப்பொடு சமணர் முண்டர் விதியில் சாக்கியர்கள்
நின்பால் பொறுப்பரியனகள் பேசில் போவதே
நோயதாகி. திரு மாலை. 8

**சமணர் சாக்கியர்**

பிணக்கற அறு வகைச் சமயமும் நம். 1. 3. 5

இலிங்கத்திட்ட புராணத்தீரும் சமணரும் சாக்கியரும்
வலிந்து வாது செய்வீர்களும் மற்று நுங்தெய்வமுமாகி
நின்ருன்-நம். 4. 10. 5

உருவாகிய ஆறு சமயங்கட்கெல்லாம்
பொருவாகி நின்ருனவன் - நம். 9. 4. 8

பொங்கு போதியும் பிண்டியுமுடைப் புத்தர்
நோன்பியர் பள்ளியுள்ளுறை
தங்கள் தேவரும் தாங்களுமேயாக என்னெஞ்ச
மென்பாய்-கலி. 2. 1. 5

துவரியாடையர் மட்டையர் சமண் தொண்டர்கள்
மண்டியுண்டு பின்னரும்
தமரும் தாங்களுமே தடிக்க என்னெஞ்ச மென்பாய் -
கலி. 2. 1. 6

தருக்கிஞல் சமண் செய்து சோறுதண்
தயிரிஞல்திரளை
மிடற்றிடை நெருக்குவாரலக்கண் அது கண்டென்
னெஞ்ச மென்பாய்-கலி. 2. 1. 7

பிச்சச்சிறு பீலி பிடித்துலகில் பிணந்தின் மடவாரவர்
போல்
அங்ஙனே அச்சமிலர் நாணிலராதன்மையால்
கலி. 2. 4 8

பிச்சச்சிறுபீலிச் சமண் குண்டர் முதலாயோர்
விச்சைக்கிறையென்னும் அவ்விறையைப்
பணியாதே-கலி. 2. 6. 5

துவரித்த வுடையவர்க்கும் தூய்மையில்லாச்
சமணர்க்கும்
அவர்கட்கங்கருளில்லா அருளானே - கலி. 5. 6. 8

வந்திக்கும் மற்றவர்க்கும் மாசுடம்பில் வல்லமணர்
தமக்குமல்லேன் - கலி. 7. 4. 5

தெருவில் திரிசிறுநோன்பியர் செஞ்சோற்றொடு
கஞ்சி மருவி
பிரிந்தவர் வாய்மொழி மதியாது வந்தடைவீர் -
கலி. 7. 9. 2

## பரத்வம்

மற்றுமோர் தெய்வமுண்டே மதியிலா மானிடங்காள்
கற்றினம் மேய்த்த வெந்தை கழலிணை பணிமினீரே.
திருமாலை. 9

ஒன்றெனப் பலவென அறிவரும் வடிவினுள் நின்ற
நன்றெழில் நாரணன் நான்முகனரனென்னுமிவரை
ஒன்றநும்மனத்துவைத்து உள்ளி நும்மிரு
பசையறுத்து
நன்றென நலஞ்செய்வது அவனிடை நம்முடை
நாளே. நம். 1. 3. 7

நங்கண்ணன் கண் அல்லதில்லை யோர்கண்ணே -
நம். 2. 2. 1

ஈபாவம் செய்து அருளால் அளிப்பாரார்
மாபாவம் விட அரற்குப் பிச்சை பெய்
கோபலகோளரி யேறன்றியே, நம். 2. 2. 2

அணைவதரவணைமேல் பூம்பாவையாகம் புணர்வது
இருவரவர் முதலும் தானே

இணைவனுமெப் பொருட்கும் வீடுமுதலாம்
புணைவன் பிறவிக் கடல் நீந்துவார்க்கே நம். 2. 8. 1

புணர்க்கு மயனும் அழிக்குமரனும்
புணர்த்த தன்னுந்தியோடு ஆகத்துமன்னி
புணர்த்த திருவாகித் தன்மார்வில்தான் சேர்
புணர்ப்பன் பெரும்புணர்ப்பு எங்கும்புலனே.
நம். 2. 8. 3

தீர்த்தனுலகளந்த சேவடிமேல் பூந்தாமம்
சேர்த்தி யவையே சிவன் முடிமேல்தான் கண்டு
பார்த்தன் தெளிந்தொழிந்த பைந்துழாயான் பெருமை
பேர்த்து மொருவரால் பேசக்கிடந்ததே. நம். 2. 8. 6

ஒருவனென்றேத்த நின்ற நளிர்மதிச்சடையனென்கோ
நான்முகக்கடவுளென்கோ
அளிமகிழ்ந்துலகமெல்லாம் படைத்தவையேத்த நின்ற
களிமலர்த்துளவனெம்மான் கண்ணனை - நம். 3. 4. 8

மூவராகிய மூர்த்தியை முதல் மூவர்க்கும் முதல்வன்
தன்னை
சாவமுள்ளன நீக்குவானை - நம். 3.6.2

திருவுருவு கிடந்தவாறும் கொப்பூழ்ச் செந்தாமரைமேல்
திசைமுகன் கருவுள் வீற்றிருந்து படைத்திட்ட
கருமங்களும் - நம். 5. 10. 8

நீலார் கண்டத்தம்மானும் நிறைநான் முகனு
மிந்திரனும்
சேலேய் கண்ணார் பலர் சூழவிரும்பும்
திருவேங்கடத்தானே - நம். 6. 10. 8

அங்குயர் முக்கட்பிரான் பிரம பெருமானவன் நீ
வெங்கதிர் வச்சிரக்கை இந்திரன் முதலாத்தெய்வம் நீ
நம். 7. 6. 4

தீயாய் நீராய்நிலனாய் விசும்பாய்க்காலாய்
தாயாய்த் தந்தையாய் மக்களாய் மற்றுமாய்
முற்றுமாய் நீயாய் - நம். 7. 8. 1.

அயர்ப்பாய்த் தேற்றமுமாய் அழலாய்க் குளிராய்
வியவாய்
வியப்பாய் வென்றிகளாய் வினையாய்ப் பயனாய்ப்
பின்னும் நீ துயக்காய் நீ நின்றவாறு. நம். 7. 8. 6

அவனேயவனும் அவனுமவனும்
அவனே மற்றெல்லாமு மறிந்தனமே. நம், 9. 3. 2

மூவராகிய வொருவனே கலி. 3. 1. 10

யாவருமாயாவையுமாய் எழில்வேதப் பொருள்களுமாய்
மூவருமாய் முதலாய மூர்த்தி. கலி. 4. 1. 2

வானாடும் மண்ணாடும் மற்றுள்ள பல்லுயிரும்
தானாய வெம்பெருமான் கலி. 4, 1. 3

இந்திரனுமிமையவரும் முனிவர்களுமெழிலமைந்த
சந்தமலர்ச்சதுமுகனும் கதிரவனும் சந்திரனும்
எந்தை யெமக்கருளென நின்று அருளுமிடம்.
கலி. 4. 1. 4

குன்றமும் வானும் மண்ணும் குளிர்புனல் திங்களோடு
நின்ற வெஞ்சுடரும் **அல்லா நிலைகளும்** ஆயவெந்தை.
4. 5 .7

சங்கையும் துணிவும் பொய்யும் மெய்யுமித்தரணி
யோம்பும்
பொங்கிய ]முகிலும் **அல்லாப் பொருள்களும்**
ஆயவெந்தை. கலி. 4. 5. 8

பாவமும் அறமும் வீடும் இன்பமும் துன்பந்தானும்
கோவமுமருளும் அல்லாக்குணங்களுமாய வெந்தை.
(திருமணிக்கூடத்தானே) கலி. 4. 5. 9

சந்தமாய்ச்சமயமாகிச் சமயவைம்பூதமாகி
அந்தமாயாதியாகி அருமறையவையுமானாய்.
கலி. 4. 6. 9

நான்மறைகள் தேடியென்றும் காணமாட்டாச்
செல்வன். கலி. 4. 8. 7

பொங்கு புணரிக்கடல் சூழாடை நிலமாமகள்
மலர்மா மங்கை
பிரமன்சிவனிந்திரன் வானவர்நாயகராய
எங்களடிகளிமையோர் தலைவருடைய திருநாமம்
நங்கள் வினைகள் தவிர வுரைமின் நமோநாராயணமே.
கலி. 6. 10. 9

கிரேத திரேத துவாபர கலியுகம் இவை நான்குமுனாய்.
கலி. 7. 7. 6

மற்றுமோர் தெய்வமுளதென்று இருப்பாரோடுற்றிலேன்.
உற்றது முன்னடியார்க் கடிமை கலி. 8. 10. 3

கானமரும் கல்லதர் போய்க் காடுறைந்த பொன்னடிக்கள்
வானவர்தம்சென்னி மலர்கண்டாய் சாழலே - கலி. 11. 5. 1

நந்தன்குலமதலையாய் வளர்ந்தான் நான்முகற்குத்
தந்தைகாண். கலி. 11. 5. 2

இவ்வேழுலகுமுண்டும் இடமுடைத்தால் சாழலே.
கலி. 11. 5. 3

பொன்வயிற்றுக்கு எறிநீருலகனைத்தும் எய்தாதால் சாழலே.
கலி. 11. 5. 4

கட்டுண்டானாகிலும் எண்ணற்கரியனிமையோர்க்கும்
கலி. 11. 5. 5

கூத்தாடினானாகிலும் என்றுமரியன் இமையோர்க்கும்
கலி. 11. 5. 6

சொல்லுண்டானாகிலும் ஏதநீர்வையகம்
முன் இுண்டுமிழ்ந்தான் கலி. 11. 5. 7

தேரூர்ந்தானாகிலும் தார்மன்னர் தங்கள் தலைமேலான்.
கலி. 11. 5. 8

மண்ணிரந்தானாகிலும் விண்டேழுலகுக்கும் மிக்கான்.
கலி. 11. 5. 9

வெள்ளத்தான் வேங்கடத்தானேலும்
கலிகன்றி உள்ளத்தினுள்ளே உளன்கண்டாய்.
கலி. 11. 5. 10

(உலகம் படைந்து-அழித்து-காத்து-உண்டுமிழ்ந்தது)
இதுநீ படைத்திடந்துண்டுமிழ்ந்த பார்- பொ. 2

மண்ணும் மலையும் மறிகடலும் மாருதமும்
விண்ணும் விழுங்கியது மெய்யென்பர். பொ. 10

என்றொருவர் மெய்யென்பர் ஏழுலகுண்டு. பொ. 34

முன்னொருநாள் மண்ணையுமிழ்ந்த வயிறு பொ. 92

செற்றெழுந்து-தீவிழித்து-மற்றிவையாவென்று
வாயங்காந்து முற்றும் மறையவற்குக் காட்டிய
மாயவனையல்லால் (மார்க்கண்டேயரிஷிக்கு) பொ. 94

உண்டதுவும் தான்கடந்த வேழுலகே பூ. 18

அறியாமை மண்கொண்டு **மண்ணுண்டு**
**மண்ணுமிழ்ந்த** மாயனென்று பூ. 36

ஞாலம் அளந்திடந்துண்டுமிழ்ந்த பூ. 47

உலகேழும் முற்றும் விழுங்கும் முகில்வண்ணன் பூ. 94

உண்டதுலகேழு முள்ளொடுங்க பூ. 98

உலகமுண்டுமிழ்ந்தும். பே. 4

மண்ணுலகமுண்டுமிழ்ந்த வண்டறையும் தண்டுழாய்க்
கண்ணனையே. பே. 8

முன்னுலக முண்டுமிழ்ந்தாய்க்கு பே. 20

நாகிருலகம் முழுதுண்டு பே. 25

உலகெல்லாம் மேலொரு காளுண்டவனே. பே. 33

பேரகலத்துள்ளொடுக்கும் பேராரமார்வனர். பே. 43

மண்ணுண்டும் பேய்ச்சிமுலையுண்டும் பே. 91

அனைத்துலகு முள்ளொடுக்கி ஆல் மேல் பே. 93

உகத்தில் ஒருநான்று நீயுயர்த்தி உள்வாங்கி நீயே.
நான். தி. 5

ஆரேயறிவார் அனைத்துலகு முண்டுமிழ்ந்த
பேராழியான் தன் பெருமையை நான். தி. 73

மேலொரு நாள் வெள்ளம் பரக்கக்
கரந்துலகம் காத்தளித்த கண்ணன் - நான். தி. 80

உலகுதன்னை-உள்ளொடுக்கிவைத்தி தி. ச. வி. 12

ஞாலமேழும் உண்டு மண்டியாலிலைத்துயின்ற. தி. ச. வி. 22

இரந்தமண் வயிற்றுளோ கரத்தி தி. ச. வி. 25

படைத்த பாரிடந்தளந்து அதுண்டுமிழ்ந்து தி. ச. வி. 28

வானகமும் மண்ணகமும் வெற்புமேழ் கடல்களும்
போனகஞ்செய்தாலிலைத்துயின்ற தி. ச. வி. 30

ஞாலமேழுமுண்டு பண்டு ஓர்பாலனாய பண்பனே
தி. ச. வி. 31

ஆய்ச்சி பாலையுண்டு மண்ணையுண்டு தி. ச. வி. 37

மண்ணையென்று சென்று அதொன்றையுண்டு தி. ச. வி. 48

மண்ணையுண்டுமிழ்ந்து தி. ச. வி. 105

மூவுலகுண்டுமிழ்ந்த முதல்வ. திருமாலை. 1

அண்டரண்ட பகிரண்டத்து ஒரு மாநிலமெழுமால் வரை.
முற்று முண்ட கண்டங் கண்டீர். அமலனாதி. 6

ஒரு பாலகனாய் ஞாலமேழுமுண்டான். அமலன். 9

அன்றுலகமுண்டவனே. குல. 8. 7

அண்டமும் நாடும் அடங்க விழுங்கிய -
பெரியாழ்வார். 1. 2. 13

மண்ணும் மலையும் கடலுமுலகேழும்
உண்ணுந்திறந்து மகிழ்ந்துண்ணும் பிள்ளைக்கு.
பெரி. 1. 2. 18

உய்யவுலகு படைத்துண்ட மணிவயிறு. பெரி. 1. 5. 1

மண்ணும் மலையும் மறிகடல்களும் மற்றும் யாவுமெல்லாம்
திண்ணம் விழுங்கியுமிழ்ந்த தேவனைச் சிக்கென
நாடுதிரேல். பெரி. 4. 1. 9

கோட்டு மண்கொண்டிடந்து
மீட்டுமஃதுண்டுமிழ்ந்து விளையாடும் விமலன். பெரி. 4. 3. 9

துற்றியேழுலகுண்ட தூமணிவண்ணன் தன்னைத்
தொழாதவர் பெற்றதாயர் வயிற்றினைப் பெருநோய்
செய்வான். பெரி. 4. 4. 2

ஏழுலகுண்டுமிழ்ந்தானே. பெரி. 5. 1. 2

உலகேழுமுண்டான் சொன்மொழி. தி. வி. 20

காளவண்ண வண்டுண் துழாய்ப் பெருமான் மதுசூதனன்
தாமோதரன் உண்டுமிழ்ந்துங்கடாய. தி. வி. 49

வியலிடமுண்டபிரானார் விடுத்த திருவருளால். தி. வி. 56

உலகமெல்லாம் முற்றும் விழுங்கியுமிழ்ந்த. தி. வி. 65

ஊழிகளாயுலகேழு முண்டானென்றிலம். தி. வி. 71

வையம் விழுங்கியும். தி. வி. 74

ஞாலம் விழுங்குமாதனை-தொழுவார். தி. வி. 79

வையமுற்றும் ஒருங்குறவுண்ட
பெருவயிற்றானை. தி. வி. 91

உலகு படைத்துண்ட வெந்தை. தி. ஆ. 2

படைத்து இடந்துண்டுமிழ்ந்தளந்து. தி. ஆ. 6

மார்பாரப்புல்கி நீயுண்டுமிழ்ந்த பூமிநீரேற்பரிதே. பெ. தி. 16

சோம்பாது இப்பல்லுருவையெல்லாம்
படர்வித்த வித்தா. பெ. தி. 18

பாருண்டான் பாருமிழ்ந்தான் பாரிடந்தான்
பாரனந்தான் பாரிடம்முன்படைத்தானென்பரால். பெ. தி. 42

கார்கலந்த...
பார்கலந்த வல்வயிற்றான். பெ. தி. 86

உலகெல்லாமுண்டுமிழ்ந்தும். சி. தி. ம

தன்னைப்பிறரறியாத் தத்துவத்தை முத்தினை...
முன்னிவ்வுலகுண்ட மூர்த்தியை. பெ. தி. ம

வரன்முதலாயவை முழுதுண்ட பரபரன். நம். 1. 1. 8

உண்டாயுலகேழ்முன்னமே
உமிழ்ந்து மாயையாய் புக்கு ,, 1. 5. 8

உண்டானேழ்வையம் ,, 1. 8. 7

உண்டானையுலகேழும் - ஓர்மூவடி கொண்டானை. ,, 1. 10. 5

மண்ணும் விண்ணு மெல்லாம்
உடனுண்ட - நம்கண்ணன்
கண்ணல்லது இல்லையோர்கண்ணே. , 2. 2. 1

யவரும் யாவையும் எல்லாப் பொருளும்
கவர்வின்றித் தன்னுளொடுங்கநின்ற ,, 2. 2. 6

ஏழுலகும் கொள்ளும் - வள்ளல்
வல்வயிற்றுப் பெருமான் ,, 2. 2. 7

பொழிலேழுமுண்ட வெந்தாய் ,, 2. 3. 4

மன்னுமுழுவேழுலகும் வயிற்றினுள
தன்னுள் கலவாதது எப்பொருளும் தானில்லையே நம் 2. 5. 3

உலகுகள் ஒக்கவே விழுங்கிப் புகுந்தான் ,, 2. 6. 2

முழுவேழுலகுமுண்டான் ,, 2. 6. 7

ஞாலமுண்டவனை ,, 2. 7. 12

மூவாத்தனி முதலாய் மூவுலகும் காவலோன் ,, 2. 8. 5

தன்னுள் கரக்குமுமிழும் ,, 2. 8. 7

முறையாலிவ்வுலகெல்லாம் படைத்திடந்து
உண்டுமிழ்ந்தளந்தாய். நம், 3. 1. 10

ஞாலமுண்டுமிழ்ந்த மாலை ,, 3. 4. 9

உலகேழுமுண்டவவன் கண்டீர் ,, 3. 6. 1

உலகேழும் உண்டுமிழ்ந்தான் தன்னை ,, 3. 6. 8

அடியார்ந்த வையமுண்டு- ,, 3. 7. 10

நக்கபிரானோடயன் முதலாக எல்லாருமெவையும் தன்னுள்
ஒக்கவொடுங்க விழுங்க வல்லானைப் பெற்று
ஒன்றும் தளர்விலனே ,, 3. 10. 9

பாலனாய் ஏழுலகுண்டு பரிவின்றி ,, 4. 2. 1

ஈசன் ஞாலமுண்டுமிழ்ந்த எந்தை ,, 4. 3. 2

ஞாலமுற்று முண்டுமிழ்ந்த நாராயணனே ,, 4. 3. 6

உண்டுமுமிழ்ந்தும்-கடந்து மிடந்தும்
கிடந்தும் நின்றும் ,, 4. 5. 10

ஒருங்காகவேயுலகேழும் விழுங்கியுமிழ்ந்திட்ட ,, 4. 6. 4

ஞாலமுண்டாய் ,, 4. 7. 1

உலகேழ் தன்னுள்ளொடுக்கி ,, 4. 8. 11

பரந்த தெய்வமும் பல்லுலகும்-படைத்து
அன்றுடனே விழுங்கி கரந்து
(ஒளித்து)
உமிழ்ந்து
கடந்து இடந்தது நம். 4. 10. 3

பாரெல்லாமுண்ட
நம் பாம்பணையான் ,, 5. 4. 1

ஆழ்கடல் மண்விண்மூடி மாவிகாரமாய் ,, 5. 4. 2

கடல்ஞாலம் செய்தேனும் யானேயென்னும்
கடல்ஞாலமாவேனும் யானேயென்னும்
கடல்ஞாலமுண்டேனும் யானேயென்னும் ,, 5. 6. 1

திறம்பாமல் மண்காக்கின்றேன்
யானே யென்னும் ,, 5. 6. 5

முழுவேழுலகு முண்டாய் ,, 5. 7. 7

இஞ்ஞாலமுண்ட நம்பிரான் தன்னை
நாடொறுமே ,, 5. 9. 7

மண்ணை முன்படைத்துண்டுமிழ்ந்து ,, 5. 10. 5

உலகமுண்ட வொண்சுடரே ,, 5. 10, 6

ஞாலமெல்லா முண்ட நம்பெருமானை ,, 6. 1. 2

கடல் ஞாலமுண்டிட்ட நின்மலா-நெடியாய் ,, 6. 2. 7

வியன்ஞாலமுன் படைத்தாய் ,, 6. 2. 10

முழுவேழுலகும் தன்வாயகம் புகவைத்துமிழ்ந்தவையாய்
அவையல்லனுமாம் ,, 6. 4. 11

நீடுலகுண்ட திறங்கிளர் வாய்ச்சிறுக்கள்வனவற்கு ,, 6. 6. 3

மூன்னுலகங்களெல்லாம் படைத்த
முகில்வண்ணன்-கண்ணன் ,, 6. 8. 1

உலகமுண்ட பெருவாயா நம். 6. 10. 1

ஆதியாகி யகலிடம் படைத்து உண்டுமிழ்ந்து 7. 1. 3

முன்செய்திவ்வுலக முண்டுமிழ்ந்தளந்தாய் 7. 2. 2

கார்க்கடல் ஞாலமுண்ட கண்ணபிரான் 7. 3. 9

அப்பன் ஊளியெழ உலகமுண்டவூணே 7. 4. 4

அப்பன் அன்றுமுதல் உலகம் செய்ததுமே 7. 4. 9

பாமரு மூவுலகும் படைத்த பற்பநாபாவோ 7. 6. 1

அகலிடம் முழுதும் படைத்து இடந்து (வராஹ)
உண்டுமிழ்ந்தளந்த (த்ரிவிக்ரம) 8. 1. 5

பொங்கு மூவுலகும் படைத்தளித்தழிக்கும்
பொருந்து மூவுருவனெம்மருவன் 8. 4. 2

தேனைநன்பாலைக் கன்னலை யமுதை
திருந்துலகுண்டவம்மானை 8. 4. 11

ஆழிசூழ்மல்லை ஞால முழுதுண்ட 8. 5. 5

மூவுலகும் தன் நெறியா வயிற்றில் கொண்டு
சிறியேனுடைச் சிந்தையுள் நின்றொழிந்தாரே. 8. 7. 8

நின்றொரு மூவுலகும் - தன் வயிற்றில் கொண்டு
நின்றவண்ணம் நின்றமாலை 8. 7. 9

சீர்வளங்கிளர் மூவுலகுண்டுமிழ் தேவபிரான் 8. 9. 4

இருமாநில முன்னுண்டு மிழ்ந்த 8. 10. 4

தான்தோன்றி முனிமாப்பிரம முதல்வித்தாய்
உலகமூன்றும் முளைப்பித்த 8. 10. 7

எண்டிசையுங் கீழும் மேலும் முற்றவுமுண்ட பிரான்
தொண்டரோமாயுய்யலல்லால் இல்லைகண்டீர்
துணையே 9. 1. 1

அவனே அகல்ஞாலம் படைத்து - இடந்தான்
அவனே அஃதுண்டுமிழ்ந்தானளந்தான் நம். 9. 3. 2

அகலிடம் படைத்திடந்துண்டுமிழ்ந்தளந்து 9. 9. 2

அவனியுண்டுமிழ்ந்தவன் 9. 9. 11

சுற்றும் நீர் படைத்து அதன்வழித்தொன் முனிமுதலா
முற்றுந் தேவரோடு உலகு செய்வான் 10. 1. 7

உலகெல்லாமுண்டுமிழ்ந்தான் 10. 2. 3

உலகுயிர் தேவும் மற்றும் படைத்தவெம்
பரம மூர்த்தி 10. 2. 7

தானே படைத்து
தானே யுண்டுமிழ்ந்து
தானேயாள் வானே 10. 5. 3

செழுமூவுலகும் தன் ஒருமாவயிற்றினுள்ளே
வைத்து ஊழியூழிதலையளிக்கும் 10. 7. 6

காரேழ் கடலேழ் மலையேழுலகுண்டும்
ஆராவயிற்றானை அடங்கப் பிடித்தேனே 10. 8. 2

முற்றவிம் மூவுலகும்
பெருந்தூறாய்த் தூற்றிற் புக்கு
முற்றக்கரந் தொளித்தாய் 10. 10. 8

பாரையுண்டு பாருமிழ்ந்து - பாரளந்து
பாரை ஆண்ட கலி. தி. நெ. தா. 20

உலகுண்ட பெருவாயரிங்கே வந்து தி. நெ. தா. 24

கொண்டல் மாருதங்கள் குலவரை தொகுநீர்க்
குரை கடலுலகுடனனைத்தும்
உண்ட மாவயிற்றோனொண்சுடரேய்ந்த
உம்பருமூழியுமானான். கலி. 1. 4. 9

பாராருலகும் பனிமால் வரையும்-கடலும்
சுடருமிவையுண்டும்-எனக்காராதென நின்றவன்.
கலி. 2. 4. 6

பாராயதுண்டுமிழ்ந்த 2. 5. 1

அண்டமுமெண்டிசையும் நிலனும் அலைநீரொடு
வானெரிகால் முதலா-வுண்டவன் 2. 9. 4

மஞ்சாடு வரையேழும் கடல்களேழும் வானகமும்
மண்ணகமும் மற்றுமெல்லாம்
எஞ்சாமல் வயிற்றடக்கி யாலின் மேலோரிளந்தளிரில்
கண் வளர்ந்தவீசன் 2. 10. 1

மூவுலகுண்டுமிழ்ந்து-அளந்தானை 3. 1. 10

உலகுண்ட மாயன் 3. 2. 8

அண்டமுமிவ்வலைகடலுமவனிகளுமெல்லாம் அமுது
செய்த திருவயிற்றன் 3. 9. 3

உலகுண்ட காளை 3. 9. 7

அண்டமுமிவ்வலை கடலும் அவனிகளுங்குலவரையும்
உண்டபிரான் 4. 1. 5

ஏழுலகும் தாழ்வரையுமெங்கும்மூடி
எண்டிசையும் மண்டலமும் மண்டி
அண்டம் மோழை யெழுந்தாழிமிகு மூழிவெள்ளம்
முன்னகட்டிலொடுக்கிய வெம்மூர்த்தி 4. 4. 9

ஞாலமுற்று முண்டுமிழ்ந்த நாதன் 4. 8. 6

பாரினையுண்டு பாரினையுமிழ்ந்து 4. 10. 5

கருந்தண்கடலும் மலையுமுலகும்
அருந்துமடிகள் அமருமூர் 5. 2. 7

உலகுண்டவனெந்தை பெம்மான் 4. 5. 1

வையமுண்டாலிலை மேவும் மாயன் கலி. 5. 4. 2

இவ்வுலகுண்ட பெருவயிற்றன் 5. 5. 4

காரார் திண்கடலேழும் மலையேழிவ்வுலகேழுமுண்டும்
ஆராதென்றிருந்தானை 5. 6. 2

அன்றுலகமுண்டுமிழ்ந்த கற்பகத்தை 5. 6. 6

ஒருகால் பெருநிலம் விழுங்கி அதுமிழ்ந்த வாயனாய் 5. 7. 9

வங்கமார் கடல்களேழும் மலையும் வானகமும் மற்றும்
அங்கண்மாஞாலமெல்லாம் அமுதுசெய்துமிழ்ந்த வெந்தை
5. 9. 2

உலகேழுமொழியாமை முனநாள்
மெய்யினளவே யமுது செய்யவல
ஐயனவன் மேவு நகர்தான் 5. 10. 2

உம்பருலகேழு கடலேழு மலையேழும்
ஒழியாமை முனநாள்
தம்பொன் வயிறாரளவு முண்டவையுமிழ்ந்த தடமார்வர்
5. 10. 3

| மேல் 7 உலகங்கள் | கீழ் 7 உலகங்கள் |
|---|---|
| பூ: | அதல |
| புவ: | விதல |
| ஸுவ: | ஸுதல |
| மஹ: | தலாதல |
| ஜந: | தராதல |
| தப: | ரஸாதல |
| ஸத்யம் | மஹாதல |

| 7 கடல்கள் | 7 மலைகள் |
|---|---|
| உப்புக்கடல் | இமயம் |
| கருப்பங்கடல் | மந்தரம் |

| | |
|---|---|
| தேன்கடல் | கைலாஸம் |
| நெய்க்கடல் | வடவிந்தம் |
| தயிர்க்கடல் | நிமதம் |
| பாற்கடல் | ஏமகூடம் |
| புனற்கடல் | நீலகிரி |

நிலவோடு வெய்யில் நிலவிருசுடரும்
உலகமுமுயிர்களுமுண்டொருகால் கலி. 6. 1. 4

பாரெழு கடலெழு மலையெழுமாய்ச்
சீர்கெழுமிவ்வுலகேழு மெல்லாம்
ஆர்கெழு வயிற்றினிலடக்கி நின்று
அங்கோரெழுத்தோருருவானவனே 6. 1. 5

அம்பரமும் பெருநிலனும் திசைகளெட்டும்
அலைகடலுங் குலவரையுமுண்ட கண்டன் 6. 6. 1

உம்பருலகோடு உயிரெல்லாமுந்தியில்
வம்புமலர்மேல் படைத்தானை மாயோனை 6. 8. 6

மூவுலகோடு அளைவெண்ணெயுண்டான் 6. 9. 3

இவ்வுலகேழும் புகக்கரந்த திருவயிற்றன் 6. 9. 5

வற்றுமுதுநீரொடு மால்வரையேழும்
துற்றுக முன் துற்றிய தொல்புகழோனே 7. 1. 2

அலை நீருலகேழும் முன்னுண்டவாயா 7. 1. 9

அன்றிவ்வையக முண்டுமிழ்ந்திட்ட வாயனை 7. 3. 2

உடையானை யொலி நீருலகங்கள் படைத்தானை 7. 6. 3

உலகுண்ட வொருவா 7. 7. 1

பன்றியாய் மீனாகியரியாய்ப்
பாரைப் படைத்துக் காத்துண்டுமிழ்ந்த பரமன்தன்னை
7. 8. 10

எண்டிசையுமெழுசுடரும் இருநிலனும் பெருவிசும்பும்
உண்டுமிழ்ந்தபெருமான் கலி. 8 3. 7

பெருநீரும்விண்ணும் மலையுமுலகேழும்
ஒருதாரா நின்னுளொடுக்கிய-நின்னையல்லால் 8. 10. 2

எண்டிசையுமெறி நீர்க்கடலும் ஏழுலகுமுடனே விழுங்கி
9. 2. 9

பூவலருந்திதன்னுள் புவனம் படைத்துண்டுமிழ்ந்த 9. 9. 1

உண்டுலகேழினையும் 9. 9. 3

உலகமேழினையுமுழில் வாங்கி
முனித்தலைவன் முழங்கொலி சேர்
திருவயிற்றில் வைத்தும்மையுய்யக் கொண்ட கலி. 11. 6. 4

பாராரும் காணமே பரவை மாநெடுங்கடலேயானகாலம்
ஆரானுமவனுடைய திருவயிற்றில் நெடுங்காலங்கிடந்தது
உள்ளத்தோராதவுணர்விலீர் 11. 6. 5

பேயிருக்கு நெடுவெள்ளம் பெருவிசும்பின் மீதோடிப்
பெருகுங்காலம்
தாயிருக்கும் வண்ணமேயும்மைத்தன் வயிற்றிருத்தியுய்யக்
கொண்டான் 11. 6. 6

மண்ணாடும் விண்ணாடும் வானவரும்-தானவரும் மற்று
மெல்லாம்
உண்ணாத பெருவெள்ள முண்ணாமல் தான் விழுங்கியுய்யக்
கொண்ட 11. 6. 7

மரங்கிளர்ந்து கருங்கடல் நீருரந்துரந்து பரந்தேறியண்டத்
தப்பால்
புறங்கிளர்ந்த காலத்துப் பொன்னுலக மேனையுமுழில்
வாங்கி
அறங்கிளர்ந்த திருவயிற்றினகம் படியில்
வைத்தும்மையுய்யக் கொண்ட 11. 6. 8

அண்டத்தின் முகடழுந்த அலைமுந்நீர்த்திரைததும்ப
ஆ. ஆ-வென்று
தொண்டர்க்குமமரர்க்கும் முனிவர்க்கும் தானருளி
உலகமேழும் உண்டொத்த திருவயிற்றினகம் படியில்
வைத்தும்மை யுய்யக் கொண்ட கலி. 11. 6. 9

தேவரையுமசுரரையும் திசைகளையும் கடல்களையும் மற்றும் முற்றும்
யாவரையுமொழியாமே யெம்பெருமானுண்டுமிழ்ந்ததறிந்து சொன்ன
காவளரும் பொழில் மங்கைக் கலிகன்றி யொலிமாலை கற்று வல்லார்
பூவளரும் திருமகளாலருள் பெற்றுப் பொன்னுலகில்
பொலிவர்தாமே 11. 6. 10

உருகாநிற்கு மென்னுள்ள மூழிமுதல்வா 11. 8. 4

உலகேழுமுண்டு மிழ்ந்தான் 9. 10. 3

பொங்கார் கடலும் பொருப்பும் நெருப்பும்
நெருக்கிப் புகப் பொன்மிடறத்தனைபோது
அங்காந்தவன் காண்மின் 10. 6. 1

நன்றுண்ட தொல்சீர்மகரக்கடலேழ்மலையேழ்
உலகேழொழியாமை நம்பி
அன்றுண்டவன் காண்மின் 10. 6. 2

பெருநிலமுண்டுமிழ்ந்த பெருவாயராகி யவர்
நம்மையாள்வர் பெரிதே 11. 4. 3

தாழ்குழலார் வைத்த தயிருண்ட பொன்வயிறு
இவ்வேழுலகுமுண்டு மிடமுடைத்தால் 11. 5. 3

உறியார் நறுவெண்ணெயுண்டுகந்த
பொன்வயிற்றுக்கு ஏறி நீருலகனைத்து
மெய்தாதால் (போதாது) 11. 5. 4

சொல்லுண்டானாகிலும்
ஓதநீர் வையகமுன் துண்டுமிழ்ந்தான் 11. 5. 7
நெய்ந்நின்ற சக்கரத்தன் திருவயிற்றில் நெடுங்காலம்
கிடந்ததோரீர் 11. 6. 1
எல்லாருமறியாரோ எம்பெருமானுண்டுமிழ்ந்த
வெச்சில்தேவர்
அல்லாதார் தாமுளரே அவனருளேயுலகாவதறியீர்களே
11. 6. 2

நெற்றிமேற்கண்ணானும் நிறைமொழிவாய்
நான்முகனும் நீண்டகால்வாய்,
ஒற்றைக்கை வெண்பகட்டி னொருவனையுமுள்ளிட்ட
வமரரோடும்
வெற்றிப்போர்க் கடலரையன் விழுங்காமல் தான்
விழுங்கியுய்யக் கொண்ட 11. 6. 3

## பிரமனைப் படைத்தது

நான்முகனை நாராயணன் படைத்தான் நான். தி. 1
அயனைப் படைத்ததோரெழிலுந்தி அமலன். 3
அயன் முதலாத்தந்த நளிர் மாமலருந்தி நாச். தி. 14. 9
நிறை நான்முகனைப் படைத்தவன் நம். 1. 5. 3
பூவில் நான்முகனைப் படைத்ததேவன் நம். 2. 2. 4
நான்முகற் பயந்த ஆதிதேவன் தி. ச. வி. 5
இந்துவார் சடையீசனைப் பயந்த
நான் முகனைத் தன்னெழிலாரும்
உந்திமாமலர் மீமிசைப் படைத்தவன் கலி. 4. 2. 9
உந்திமேல் நான்முகனைப் படைத்தான் ,, 5. 4. 1
ஒருவனை யுந்திப் பூமேலோங்குவித்து ,, 5. 9. 3
வம்பு மலர் மேல் படைத்தானை மாயோனை ,, 6. 8. 6

## பிரமனுக்கு நல்வேத உபதேசம்

அன்னேயிவரைய றிவன் மறைநான்கும் முன்னே
யுரைத்த முனிவரிவர் ,, 11. 3. 3

## மறைத்து வந்த ராவணனை பிரம்மாவுக்குக் காட்டிக் கொடுத்தது

பூமேய மாதவத்தோன் தாள் பணிந்த வாளரக்கன்
நீண்முடியை
பாதமத்தாலெண்ணினுன் பண்பு பொ. 45

ஆய்ந்த வருமறையோன் நான்முகத்தோன் நன் குறங்கில்
வாய்ந்த குழவியாய் வாளரக்கன் ஏய்ந்த
முடிப்போது முன்றேழென்றெண்ணினுன் பே. 77

கொண்டு குடங்கால் மேல் வைத்த குழவியாய்த்
தண்டவரக்கன் தலை தாளால் பண்டெண்ணி நான். தி. 44

## பிரமன் கர்வம் அடங்கியது

நான் முகன் நாள்மிகைத் தருக்கையிருக்கு வாய்மை
நல மிகு சீருரோமசனுல் நவிற்றி கலி. 3. 4. 2

## பிரமன் திருவடி விளக்க—கங்கை

அங்கை நீரேற்ருர்க்கு அலர்மேலோன் கால் கழுவ
கங்கை நீர்கான்ற கழல் பே. 6

## கங்கை சுத்தி பெற அருள்

பொடிசேர் அனற்கங்கையேற்ருன் அவிர்சடைமேல்பாய்ந்த
புனற்கங்கையென்னும் பேர்ப்பொன்
உன்றன் அடிசேர்ந்தருள் பெற்ருளன்றே பொ. 97

## பாணசுர யுத்தத்தில் சிவன் தோற்றல்

உவரிக்கடல் நஞ்சமுண்டான் கடனென்று
வாணற்குடன் நின்று தோற்ருனெருங்கு நான். தி. 56

பரிவின்றி வாணனைக் காத்து மென்று அன்று
படையொடும் வந்தெதிர்ந்த
திரிபுரம் செற்றவனும் மகனும் பின்னுமங்கியும்
போர்தொலையப்
பொருசிறைப் புள்ளைக் கடாவிய மாயனை நம். 3. 10. 4
வாணபுரம்புக்கு முக்கட்பிரானைத் தொலைய „ 7. 10. 7
ஈசன் தன் படையொடுங்கிளையோடுமோட கலி. 4. 2. 5
சடையானோட வடல் வாணன் தடந்தோள்
துணித்த „ 5. 1. 7
வெஞ்சினத்தகொடுந்தொழிலோன் விசையுருவை
யசைவித்த „ 5. 6. 6
விடையானோட வன்று விறலாழி விசைத்தானை „ 7. 6. 3

## சிவன் பூஜையினுல் பகவானுடைய அவிக்ருதத்வம் (பெருமை)

நலமாகத் தீக்கொண்ட செஞ்சடையான் சென்று
என்றும் பூக்கொண்டு வல்லவாறேத்த மகிழாத. நான். தி. 75

## சிவன் விஷ்ணு நாமத்தைக் கேட்டுப் பரவசனுனமை

நீண்முடியான் தன்பெயரே கேட்டிருந்து
அங்காரலங்கலானமையாலாய்ந்து நான். தி. 78

## சிவன் ஆழ்வாருக்கு ஒவ்வான்

பிதிருமனமிலேன் பிஞ்ஞகன்றன்னோடெதிர்வன்
அவனெனக்கு நேரான் நான். தி. 84

## சிவாதி தேவதாந்தரங்கள் பகவானை வழிபடுதல்

நீரேறு செஞ்சடை நீலகண்டனும் நான்முகனும்
முறையால்
சீரேறு வாசகஞ் செய்ய நின்ற திருமாலை பெ. 4. 1. 5

தாதுலாவு கொன்றைமாலை துன்னு செஞ்சடைச் சிவன்
நீதியால் வணங்குபாத நின்மலா                                   தி. ச. வி. 9

நாள் தொறும் வானவர் தம்மையாளுமவனும்
நான்முகனும் சடைமுடியண்ணலும்
செம்மையாலவன் பாதபங்கயம் சிந்தித்தேத்தித் திரிவரே
நம். 3. 6. 4

தெரிவரிய சிவன் பிரமன் அமரர் கோன் பணிந்தேத்தும்
,, 4. 8. 8

பேச நின்ற சிவனுக்கும் பிரமன் தனக்கும் பிறர்க்கும்
நாயகனவனே ,, 4. 10. 4

அரன் நான்முகனேத்தும் செய்ய நின்திருப்பாதத்தை
யான் என்று கொல் சேர்வதந்தோ ,, 7. 6. 2

திருமால், நான்முகன் செஞ்சடையானென்றிவர்கள்
எம்பெருமான் தன்மையை யாரறிகிற்பார் பேசியென்
,, 8. 3. 9

சிவனும் பிரமனும் காணாது அருமாலெய்தியடிபரவ
அருளையீந்தவம்மானே ,, 10. 7. 6

அருளை ஈனன்னம்மானே யென்னும் முக்கணம்மானும்...
இருள்கள் கடியும் முனிவரும் ஏத்துமம்மான்
திருமலை திருமாலிருஞ் சோலை மலையே ,, 10. 7. 7

வானவர் தங்கள் கோனும் மலர் மிசையயனும்
நாளும் தேமலர் தூவியேத்தும் சேவடிச் செங்கண் மாலை
தி. கு. தா. 20

ஆடு தாமரையோனு மீசனுமமரர் கோனும் நின்றேத்தும்
கலி. 2. 1. 9

பிறையாரும் சடையானும்
பிரமனுமுன் தொழுதேத்த ,, 6. 9. 9

## சிவன் பிரமன் அறியமாட்டாதவர்கள்

ஒற்றை விடையனும் நான்முகனும்
உன்னையறியாப் பெருமையோனே
முற்றவுலகெல்லாம் நீயேயாகி மூன்றெழுத்தாய
முதல்வனேயோ பெரி. 4. 10. 4

ஆறுபொதி சடையோன் அறிவருந் தன்மைப்
பெருமையுள் நின்றனே தி. எ. கூ

தாமோதரனுருவாகிய சிவற்கும் திசைமுகற்கும்
ஆமோதரமறிய எம்மானை யென்னாழி வண்ணனையே
நம். 2. 7. 12

பிறையேறுசடையானும் நான்முகனுமிந்திரனும்
இறையாதலறிந்தேத்த வீற்றிருத்தலிது வியப்பே......
,, 3. 1. 10

## சிவன் சாபம் நீக்கி அருள் புரிந்தது

பண்புரிந்த நான்மறையோன் சென்னிப் பலியேற்ற
வெண்புரிநூல் மார்பன் வினைதீர
புண்புரிந்த வாகத்தான் தாள் பணிவார்—கண்டீர் பொ. 46

ஒற்றைப் பிறையிருந்த செஞ்சடையான் பின்சென்று
மாலைக்குறையிரந்து தான் முடித்தான் கொண்டு பூ. 17

எரியுருவத்தேறேறி பட்ட விடுசாபம்
பாறேறி யுண்டதலைவாய் நிறையக் கோட்டங்கையொண்
குருதி
கண்டபொருள் சொல்லில்—கதை பூ. 63

மேல் நான்முகனரனையிட்ட விடுசாபம்
தான் நாரணனொழித்தான் தாரகையுள் நான். தி. 31

என்னெஞ்சமேயானை யில்லா விடையேற்றான்
வெவ்வினை தீர்த்தாயானுக்காக்கினேனன்பு ,, 58

வேறிசைந்த செக்கர்மேனி நீறணிந்த
புன்சடைக் கீறு திங்கள் வைத்தவன்
கைவைத்த வன் கபாலமிசை—ஊறுசெங்குருதியால்
நிறைத்த காரணந்தனே திச. வி. 42

சலங்கலந்த செஞ்சடைக் கறுத்த கண்டன்
வன்றுயற்கெட வாசநீர் கொடுத்தவனடுத்தசீர் ,, 113

துண்டவெண்பிறையன் துயர்தீர்த்தவன் அமலனுதி 6
கண்ட கடலும் மலையுமுலகேழும்
முண்டத்துக் காற்ரு முகில் வண்ணு ஓ ஓ வென்று
இண்டைச் சடை முடியீசனிரக் கொள்
மண்டை நிறைத்தானே பெரி. 1. 8. 9

அடைக் கலத் தோங்கு கமலத்தலரயன்
சென்னி யென்னும் முடைக்கலத் தூண் முன்
அரனுக்கு நீக்கியை தி. வி. 86

மாபாவம் விட அரற்குப் பிச்சைபெய்
கோபால கோளரி ஏறன்றியே நம்: 2. 2. 2

குமரனுர் தாதை துன்பம் துடைத்த கோவிந்தனுரே
,, 10. 2. 6

முண்டியான் சாபந்தீர்த்த வொருவனூர் தி. கு. தா. 19

அயனரனைத் தான் முனிந்திட்ட வெந்திறல
சாபம் தவிர்த்தவன் கலி. 1. 4. 8

வெந்தாரென்பும் சுடுநீறும் மெய்யில் பூசிக் கையகத்து
ஓர்சந்தார் தலை கொண்டுலகேழும் திரியும்
பெரியோன் தான் சென்று—என் எந்தாய்
சாபம் தீரென்ன இலங்கமுதுநீர் திருமார்பில் தந்தான்
,, 1. 5. 8

புரமெரி செய்த சிவனுறு துயர் களை தேவை ,, 2. 3. 1

நக்கன் ஊன்முகமார் தலையோட்டுணொழித்த
வெந்தை ,, 3. 4. 2

அரன் கொண்டு திரியும் முண்டமது நிறைத்து
அவன்கண் சாபமது நீக்கும் முதல்வனவன் ,, 3. 9. 3

வாளேயார் தடங்கணுமை பங்கனவன் சாபம் மற்றது
நீங்க மூளையார் சிரத்தையம் முன்னளித்த ,, 4. 2. 8

இறையான் கையில் நிறையாத முண்டம்
நிறைத்த ,, 5. 1. 8

தக்கன் வேள்வி தகர்த்த தலைவன் துக்கம்
துடைத்த ,, 5. 2. 6

ஆகந்தன்னுல் ஒருவனைச் சாபம் நீக்கி
உம்பராளென்று விட்டான் ,, 5. 9. 3

ஊனமர் தலையொன்றேந்தி உலகெலாந்திரியுமீசன்
ஈனமர் சாபம் நீக்கா யென்ன ஒண்புனலையீந்தான் ,, 5. 9. 4

ஆறும் பிறையுமரவமும் அடம்பும் சடைமேலணிந்து
உடலம் நீறும் பூசி யேறூரும் இறையோன் சென்று
குறையிரப்ப
மாறென்றில்லா வாசநீர்
வரை மார்பகலத்தளித்துகந்தான் ,, 6. 7. 9

முடையடர்த்த சிரமேந்தி மூவுலகும் பலிதிரிவோன்
இடர் கெடுத்த திருவாளன் கலி. 6. 9. 1

சுடலையில் சுடுநீறனமர்ந்ததோர் நடலை தீர்த்தவனை
,, 10. 1. 5

## ப்ரஹ்மசிவாதிகளுக்கு திருமேனியில் ஒதுங்க இடம் கொடுத்தது

மாமதிள் மூன்று எய்த இறையான் நின்னுகத்திறை பெ. 28
பொன்திகழும் மேனிப்புரிசடையம் புண்ணியனும்......
ஒருவனொருவனங்கத் தென்றுமுளன் ,, 98

நறவேற்றான் பாகத்தான் பே. 31

பனிநீர் அகத்துலவு செஞ்சடையானகத்தான்
நான்குமுகத்தான் நின்னுந்தி முதல் பெ. தி. 71

வலத்தனன் திரிபுரமெரித்தவன் இடம்பெறத்துந்தித்தலத்து
எழுதிசைமுகன் படைத்த நல்லுலகமும் தானும். நம். 1. 3. 9

ஏறனைப் பூவனைப் பூமகள் தன்னை
வேறின்றி விண்தொழத்தன்னுள் வைத்து...
மால்தனில் மிக்குமோர் தேவுமுளதே ,, 2. 2. 3

அயனிடமே கொப்பூழ் ஒருவிடமுமெந்தை பெருமாற்கு
அரனோ
ஒருவிடமொன்றின்றி என்னுள் கலந்தானுக்கே ,, 2. 5. 2

ஏறாளுமிறையோனும் திசைமுகனும் திருமகளும்
கூறாளும் தனியுடம்பன் நம். 4. 8. 1

தடம்புனல சடைமுடியன் தனியொரு
கூறமர்ந்துறையும் ,, 4. 8. 10

தாளமாமரையான் உனதுந்தியான்—வாள் கொள்
நீள் மழுவாளி உன்னாகத்தான் ,, 9. 3. 10

சிவனெடு பிரமன் வண்திருமடந்தை
சேர் திருவாகம் ,, 9. 9. 6

மாகத்திளமதியஞ் சேருஞ் சடையானை பாகத்து
வைத்தான் ,, 10. 4. 6

குலவரையின் மடப்பாவையிடப்பாற் கொண்டான்
பங்கத்தாய் தி. நெ. தா, 9

பிணங்களிடு காடதனுள் நடமாடும் பிஞ்ஞகனோடு
**இணங்கு** திருச்சக்கரத் தெம் பெருமானார்க்கிடம் கலி. 2. 6. 9

பிறைதங்கு சடையானை வலத்தே வைத்துப்
பிரமனைத் தன்னுந்தியிலே தோற்று வித்து
கறைதங்கு வேல்தடங்கண் திருவை மார்பில் கலந்தவன்
தாளணைகிற்பீர் ,, 3.4.9

அலர் மகட்குமரற்கும்
கூறுகக் கொடுத்தருளுந்திருவுடம்பனிமையோர்
குலமுதல்வன் ,, 3. 9. 8

சூழல் நிறவண்ண நின் கூறு கொண்ட
தழல் நிறவண்ணனன் ,, 6. 1. 3

வாருர் மதி பொதியுஞ் சடை மழுவாளி யொடொரு பால
தாருகிய தலைவன் ,, 7. 9. 4

வாசவார் குழலாள் மலை மங்கை தன் பங்கனைப்
பங்கில் வைத்துகந்தான்றன்னை ,, 7. 10. 3

கண்ணுதல் கூடிய அருத்தனை ,, 7. 10. 7

ஏறு மேறி யிலங்கு மொண் மழுப் பற்றும் ஈசற்கிசைந்து
உடம்பிலோர்
கூறுதான் கொடுத்தான் குலமாமகட்கினியான் ,, 9. 10. 4

மல்கியதோளும் மானுரியதளுமுடையவர்
தமக்குமோர்பாகம் நல்கிய நலமோ கலி. 10. 9. 4

**விஷ்ணுவுக்கும் சிவனுக்கும் உள்ள தாரதம்யம்**

அரன் நாரணன் நாமம் ஆன்விடை புள்ளூர்தி......
கார்மேனி யொன்று பொ. 5

ஏற்றான் புள்ளூர்ந்தான் எயிலெரித்தான் மாரிடந்தான்
நீற்றான் நிழல்மணி வண்ணத்தான் கூற்றொருபால்
மங்கையான் பூமகளான் வார்சடையான் நீண்முடியான்
கங்கையான் நீள்கழலான் காப்பு ,, 74

| விஷ்ணு | சிவன் |
|---|---|
| 1) பெயர். ஹரி, ஸர்வவ்யாபகன், நாராயணன் ஸர்வரக்ஷகன் | ஹரன் ஸர்வத்தையும் அழிப்பதுவே தொழில் |
| 2) வாஹனம் வேதமூர்த்தியான கருடன் | மூடத்தனத்துக்கு உதாரணமாகக் காட்டப்படும் எருது |
| 3) ப்ரமாணம் அபௌருஷேயமான வேதம் | மனிசரால் ஆக்கப்பட்ட ஆகமம் |
| 4) வாஸ ஸ்தானம் நீர்மைக்குத் தகுதியான திருப்பாற்கடல் | கடினத்தனமுள்ள கைலாச பர்வதம் |
| 5) தொழில் இன்னருளுக்குரிய ரக்ஷணம் | கல் நெஞ்சனென்று சொல்லும் படியான ஸம்ஹாரம் |
| 6) ஆயுதம் அருளார் திருச்சக்கரம் | கொலைத் தொழிலுக்கேற்ற சூலாயுதம் |
| 7) வடிவம் கண்டபோதே தாபங்களெல்லாம் தீரும்படியான காளமேகவுருவம் | காணவொண்ணாதபடி காலாக்நி |
| 8) சிவனுட்பட எல்லாவற்றையும் சரீரகமாகவுடையவன் | சிவன் ஸ்ரீமந்நாராயணனுக்குச் சரீரபூதன் |

| சிவன் | விஷ்ணு |
| --- | --- |
| ஏற்றான்-ரிஷபத்தை வாஹன மாக உடையவன் | புள்ளூர்ந்தான்-கருடனை வாஹனமாக உடையவன் |
| எயில் எரித்தான்-த்ரிபுரஸம் ஹாரம் பண்ணினவன் | மார்விடந்தான்-இரணியவதம் செய்தவன் |
| நீற்றான்-சாம்பலைப் பூசிக் கொண்டிருப்பவன் | நிழல்மணி வண்ணத்தான்-நீலரத்னம் போல குளிர்ந்த வடிவுபடைத்தவன் |
| கூற்றொரு பால் மங்கையான் ஒரு பக்கத்திலே பார்வதியை வைத்திருப்பவன் | பூமகளான்-பெரிய பிராட்டியை மஹிஷியாக உடையவன் |
| வார்சடையான்-நீண்ட ஜடையை தரித்தவன் | நீள் முடியான்-நீண்ட கிரீடம் தரிப்பவன் |
| கங்கையான்-சடைமேல் கங்கையைத் தாங்கிக் கொண்டிருப்பவன் | நீள்கழலான்-நீண்ட திருவடி களையுடையவன் |

காப்பு - ரக்ஷணத்தில் அடங்கியவன் - சிவனும் எம்பெருமான் ஆளுகையிலேயே அடங்கினவன்.

பொன்திகழுமேனிப் புரிசடையம் புண்ணியனும்
நின்றுலகம் தாய நெடுமாலும் என்றும்
இருவரங்கத்தால் திரிவரேலும் ஒருவன்
ஒருவனங்கத்தென்று முளன். பெரா. 98

## திரிபுரதஹநம்

புரமொருமூன்றெரித்து நம். 1. 1. 8

கள்ளவேடத்தைக் கொண்டுபோய்ப் புரம்புக்கவாறும்
கலந்தசுரரை உள்ளம் பேதம் செய்திட்டு உயிருண்ட
உபாயங்களும்

வெள்ளநீர்ச்சடையானும் நின்னிடை வேறலாமை
விளங்க நின்றதும் 5. 10. 4

எயில் மூன்றெரித்த 7. 6. 7

திரிபுர மூன்றெரித்தானும் கலி. 2. 8. 1

நண்ணூர் நகரம் வீழ நனிமலே சிலேவளேவு செய்து
அங்கழல் நிற வம்பது வானவனே ,, 7. 1. 3

## சிவபிரான் நால்வர்க்கு உபதேசித்து

அறிவாருும் ஆலமரநீழல் அறம் நால்வர்க்கன்றுரைத்த
ஆலமமர் கண்டத்தரன் பொ. 4

ஆலங்கிழற்கீழறநெறியை —நால்வர்க்கு
மேலேயுகத்துரைத்தான் மெய்த்தவத்தோன்—ஞால
மளந்தானே யாழிக்கிடந்தானே —ஆல்மேல்
வளர்ந்தானேத் தான் வணங்குமாறு. நான். தி. 17

## சிவன் நஞ்சுண்டது

அலேகடல்கடைந்து அதனுள் கண்ணுநல்
நஞ்சுண்ணக் கண்டவனே கலி. 6. 1. 2

## மார்க்கண்டேயன் கண்ட பகவத்பரத்வம்

மாற்கண்டன் கண்டவகையே வருங்கண்டீர் நான். தி. 15

புக்கடிமையினால் தன்னேக் கண்ட மார்க்கண்டேயனவனே
நக்கபிரானுமன்றுய்யக் கொண்டது நாராயணனருளே
நம். 4. 10. 8

மறுத்துவமனேடேகண்டீர் மார்க்கண்டேயனும்
கரியே நம். 5. 2. 7

மார்க்கண்டேயனுக்கு வாழுநாள்
இண்டைச்சடைமுடியீசனுடன் கொண்டுசாச்செல்ல
கொண்டங்குத்தன்னெடும் கொண்டுடன்
சென்றதுணர்ந்துமே ,, 7. 5. 7

மன்னுநான்மறை மாமுனிபெற்ற மைந்தனை
மதியாத வெங்கூற்றந்தன்னை யஞ்சி நின்சரணெனச்
சரணாய்த் தகவில்காலனை
யுக முனிந்தொழியா கலி. 5. 8. 6

## இந்திரனுக்குப் பதவியளித்தல்

வெந்திறல்களிறும் வேலைவாயமுதும்
விண்ணொடு விண்ணவர்க்கரசும்
இந்திரற்கருளி யெமக்கு மீந்தருளும் கலி. 1. 4. 7

## சந்திரசாப விமோசனம்

மதித்தாய் மதிகோள் விடுத்தாய் நான். தி. 12

மாமதி கோள் முன்னம் விடுத்த முகில் வண்ணன் பெ தி. ம

பான்மதிக்கிடர் தீர்த்தவன் கலி, 1. 8. 6

மதிகோள் விடுத்ததேவா ,, 6. 2. 8

பனி சேர்விசும்பில் பான்மதிகோள் விடுத்தானிடம் ,, 6. 4. 9

பனி மதிகோள் விடுத்துகந்த ,, 8. 3. 3

முற்று மாமதி கோள் விடுத்தானையெம்மானை ,, 8. 9. 7

தேம்பலிளந்திங்கள் சிறை விடுத்து ,, 11. 8. 7

## சுமுகனுக்கு அபயம்

அடுத்த கடும்பகைஞற் காற்றேனென்றோடிப்
படுத்த பெரும்பாழி சூழ்ந்த—விடந்தரவை
வல்லாளன் கைக்கொடுத்த மாமேனி மாயவனுக்கு
அல்லாது மாவரோ ஆள் பொ. 80

பதிப்பகைஞற்காற்றாது...
வாளரவந்தன்னை மதித்து அவன்தன் வல்லாகத்தேற்றிய
மாமேனி மாயவனை நான். தி. 74

நஞ்சு சோர்வதோர் வெஞ்சின வரவம் வெருவி வந்து
நின்சரணெனச் சரணு
நெஞ்சில் கொண்டு நின்னஞ்சிறைப் பறவைக்கு
அடைக்கலம் கொடுத்தருள் செய்ததறிந்து கலி. 5. 8. 4

## க்ஷத்திர பந்து உபாக்யாநம்

கத்திரபந்து மன்றே பராங்கதி கண்டு கொண்டான்
திருமாலை. 4.

## மந்தேஹ அசுரர்கள் கதை. அர்க்ய ப்ரதாந வைபவம்

மீண்டவற்றுள் எரிகொள் செந்தீ வீழசுரரைப் போல
தி. வி. 82

## தேவாசுரர் யுத்தம்

தேவாசுரம் செற்றவனே திருமாலே நம். 9. 8. 7

## நமனும் முற்கலனும் பேச்சு. திருநாம வைபவம்

நமனும் முற்கலனும் பேச நரகில் நின்றார்கள் கேட்க
நரகமே சுவர்க்கமாகும் நாமங்களுடைய நம்பீ. திருமாலை. 12

## சேஷசயனம்

அஞ்சி அழுதேன் அரவணைமேற்கண்டுதொழுதேன். பொ. 16
பாலோதம் சிந்தப்படநாகணைக்கிடந்த „ 42

அவரிவரென் றில்லையரவணையான் பாதம்
எவர்வணங்கி யேத்தாரெண் ணில் பூ. 12
நாகத்தின் தண்பள்ளி கொள்வான் றனக்கு ,, 15
விடங்காலும் தீவாயரவணைமேல் ,, 71
பொங்கு படமூக்கிலாயிரவாய்ப் பாம்பணை மேல்
சேர்ந்தாய் ,, 97
பாம்பணையின் மேலான் பே. 11
அடைந்தஅரவணைமேல் ,, 28
செவி தெரியா நாகத்தான் ,, 31
பாம்பும்... இடமாகக் கொண்டான் ,, 32
நேமியரவணையான் சேவடிக்கே ,, 80
ஆங்காரவாரமதுகேட்டு அழலுமிழும் பூங்காரர-
வணையான் பொன்மேனி
யாங்காண வல்லமே யல்லமே நான். தி. 10
வெள்ளத்தரவணையின் மேல்—கிடக்குமே ,, 30
ஐந்தலை வாய்நாகத்தணை ,, 35
படநாகணை நெடியமாற்கு ,, 66
பைதெளிந்த பாம்பினணையாயருளாயடியேற்கு
வேம்புங்கறியாகுமென்று ,, 94
தடங்கடற்பணத்தலைச் செங்கணாகணைக்கிடந்த
செல்வமல்கு சீருய் தி. ச. வி. 15
நாகமூர்த்திசயன நலங்கடற்கிடந்து ,, 17
பௌவநீரராவணைப் படுத்தபாயல் பள்ளிகொள்வது
என்கொல் வேலைவண்ணனே ,, 18
புள்ளின் மெய்ம்பகைக்கடல் கிடத்தல் காதலித்ததே ,, 19

கூசமொன்றுமின்றி மாசுணம் படுத்து
வேலை நீர் தி. ச. வி. 20

அனந்தன் மேற்கிடந்தவெம் புண்ணியா ,, 45

நச்சராவணைக் கிடந்த நாத ,, 85

நச்சுநாகணைக் கிடந்தநாதன் வேதகீதனே ,, 117

படுத்த பைந்நாகணைப் பள்ளி கொண்டான் தி. ப. 9

அரவணையாயாயரேறே பெரி. 2. 2. 1

அரவினணை மேலான் ,, 2. 6. 6

அரவிற் பள்ளி கொண்டு ,, 3. 5. 11

ஆயிரந்தோள் பரப்பி முடியாயிர மின்னிலக
ஆயிரம் பைந்தலைய அனந்தசயனனாளும் மலை ,, 4. 3. 10

வெள்ளை வெள்ளத்தின் மேலொருபாம்பை மெத்தையாக
விரித்ததன் மேலே கள்ள நித்திரை கொள்கின்ற ,, 5. 1. 7

அரவணை மேற்பள்ளி கொண்டாய் நாச். தி. 3. 1

அரவணை மேற்பள்ளி கொண்ட முகில் வண்ணனே
தி. வி. 26

பாம்பணையான் பெ. தி. 86

மன்னிய பல்பொறி சேர் ஆயிரவாய் வாளரவின்...
மன்னியநாகத்தணை மேலோர் மாமலைபோல் பெ. தி. ம

நாண் மதியே நீயிந்நாள்
ஐவாயரவணை மேல் ஆழிப் பெருமானார்—மெய்
வாசகங்கேட்டு உன் மெய் நீர்மை தோற்றுயே நம். 2. 1. 6

பைத்த பாம்பணையான் திருவேங்கடம் ,, 3. 3. 10

அனந்தன் தன்மேல் நண்ணி நன்குறைகின்றானை ,, 3. 4. 9

படவரவினணைக்கிடந்த பரஞ்சுடர் ,, 3. 6. 10

| | |
|---|---|
| பைகொள் பாம்பேறி உறைபரனே | நம். 3. 8. 4 |
| பணங்கொளரவணையான் திருநாமம் படிமினோ | ,, 4. 1. 8 |
| படநாகத்தணைக் கிடந்த | ,, 4. 8. 3 |
| நாகமிசைத்துயில்வான்போல் உலகெல்லாம் நன்கொடுங்க | ,, 4. 8. 9 |
| அரவினணையம்மானே | ,, 5. 7. 1 |
| நச்சரவினணைமேல் நம்பிரானது நன்னலமே | ,, 5. 9. 4 |
| நச்சுநாகணையானே | ,, 5. 10. 10 |
| நாகணைமிசை நம்பிரான் சரணேசரண் நமக்கென்று | ,, 5. 10. 11 |
| அரவிற் பள்ளிப்பிரான் தன் மாய வினைகளை | ,, 6. 4. 1 |
| பையரவினணைப் பள்ளியினானுக்கு | ,, 6. 6. 7 |
| பைகொள் பாம்பணையாய் | ,, 7. 2. 6 |
| பைவிடப் பாம்பணையான் திருக்குண்டலக்காதுகளே | ,, 7. 7. 6 |
| பாம்பணையப்பனமர்ந்துறையும் | ,, 7. 10. 5 |
| பணங்களாயிரமுமுடையபைந்நாகப் பள்ளியாய் பாற்கடல் சேர்ப்பா | ,, 8. 1. 8 |
| படவரவணையான்றன் நாமமல்லால் பரவாளிவளே | ,, 8. 9. 8 |
| பாம்பணைப் பள்ளியாய் தழுவுமாறறியேன் | ,, 9. 3. 9 |
| வரிவாளரவினணைப் பள்ளி கொள்கின்ற கரியான் | ,, 9. 4. 5 |
| படர்கொள் பாம்பணைப் பள்ளி கொள்வான் திருமோகூர் | ,, 10. 1. 4 |
| விடமுடையரவில் பள்ளிவிரும்பினான் | ,, 10. 2. 1 |

| | |
|---|---|
| பாம்பணைப் பள்ளி கொண்டான் | நம். 10. 2. 7 |
| படமுடையரவில் பள்ளிபயின்றவன் பாதங்காண | ,, 10. 2. 8 |
| நாகத்தணையானை | ,, 10. 4. 6 |
| மலைமாடத்து அரவணைமேல் வாட்டாற்றான் | ,, 10. 6. 6 |
| நஞ்சரவில் துயிலமர்ந்த நம்பி | தி. நெ. தா. 12 |
| பணங்களாயிரமுடைய நல்லரவணைப் பள்ளிக்கொள் பரமாவென்று | |
| இணங்கிவானவர் மணிமுடிபணிதர | கலி. 1. 2. 6 |
| படநாகத்தணைக் கிடந்து | ,, 2. 5. 10 |
| உரந்தருமெல்லணைப் பள்ளிகொண்டான் | |
| ஒருகால்முன்னம் மாவுருவாய் கடலுள் | ,, 2. 9. 3 |
| அரவணைத் துயின்ற ஆழியான் | ,, 4. 10. 9 |
| பைகொள் நாகத்தணையான் | ,, 5. 4. 2 |
| தீவாய் நாகணையில் துயில்வானே | ,, 7. 7. 9 |
| ஐவாயரவணைமேல் உறையமலா | ,, 7. 7. 8 |
| வரியரவினணைத் துயின்று | ,, 8. 3. 2 |
| ஆயிரவாயரவணை மேல் பேராளர் பெருமான் | ,, 8. 3. 9 |
| பாம்பினணையான் | ,, 9. 4. 8 |
| அண்டரும் பரவ அவரவணைத்துயின்ற | ,, 9. 8. 2 |
| விடங்கலந்தமர்ந்த வரவணைத்துயின்று | ,, 9. 8. 9 |
| பாற்தட்பாழியில் பள்ளி விரும்பிய | ,, 10. 1. 7 |
| ஐவாய்ப் பாம்பினணைப் பள்ளிகொண்டாய் பரஞ்சோதீ | ,, 11. 8. 7 |

## கருடத்வஜன்

| | |
|---|---|
| வெஞ்சிறைப்புள்ளுயர்த்தான் | நம். 1. 4. 1 |

கொடியா அடுபுள்ளுயர்த்த நம். 1. 6. 9

புள்ளூர் கொடியானே ,, 3. 8. 1

கொடிமன்னு புள்ளுடையண்ணல் கழல்கள்
குறுகுமினோ நம் 4. 1. 9

ஆடுபுட்கொடி ,, 4 10. 7

கருளப்புட்கொடி ,, 5. 7. 3

ஆடல் பறவையுயர்ந்த ,, 8. 2. 4

**கருடவாஹனன் கஜேந்த்ரவரதன்**

இருஞ்சிறைப் புள் ஊர்ந்தான் பொ. 17

பிறைமருப்பின் பைங்கண்மால் யானை படுதுயரங்-
காத்தளித்தசெங்கண்மால் ,, 29

மேலொருநாள் கைந்நாகங் காத்தான் கழல் ,, 47

வேழம் தொடர்வான் கொடுமுதலைசூழ்ந்த ,, 78

பிடிசேர் களிறளித்த பேராளா ,, 97

தொடரெடுத்த மால்யானை...
அன்றிட ரடுக்க ஆழியான் பாதம் பணிந்தன்றே பூ. 13

கரியதோர் வெண் கோட்டு மால் யானை வென்று
முடித்தன்றே—தண் கோட்டு மாமலரால் தாழ்ந்து ,, 22

ஏய்ந்த பிறைக் கோட்டுச் செங்கண் கரிவிடுத்த
பெம்மான் ,, 73

ஆழ்ந்த மணிநீர்ச்சுனை வளர்ந்த மாமுதலை
கொன்றான் பே. 50

குட்டத்துக் கோள்முதலை துஞ்சக்குறித் தெறிந்த
சக்கரத்தான் ,, 99

மதித்தாய் மடுக்கிடந்த மாமுதலை கோள் விடுப்பான்
ஆழிவிடற் கிரண்டும் போயிரண்டின் வீடு நான். தி. 12

ஆனைகாத் தொரானை கொன்று — தி. ச. வி. 40

ஆரானைக்காகி
செம்புலாலுண்டு வாழும் முதலை மேல் சீறிவந்தார்
திருமாலை. 28

விண்ணுளார் வியப்ப வந்து ஆனைக்
கன்றருளையீந்த — ,, 44

விழுங்கிய முதலையின் பிலம்புரை பேழ்வாய்
வெள்ளெயிறுறவதன் விடத்தினுக்கனுங்கி
அழுங்கிய வானையினருந்துயர் கெடுத்த — தி. ப. எ. 2

பதகமுதலை வாய்ப்பட்ட களிறு
கதறிக்கை கூப்பி யென் கண்ணா கண்ணா வென்ன
உதவப் புள்ளூர்ந்து அங்குறு துயர்தீர்த்த அதகன்.
பெ. 2. 1. 9

தடம் பெரும் பொய்கை வாய்
வாழுமுதலை வலைப்பட்டு வாதிப்புண்
வேழந்துயர் கெ விண்ணேறு பெருமானைப்
ஆழிபணி கொண்டான் × அதற்கருள் செய்தான் ,, 2. 10. 8

ஒருவாரணம் பணி கொண்டவன் பொய்கையில் ,, 4. 2. 5

கண்ணனே கரிகோள் விடுத்தானே ,, 5. 1. 8

கம்பமாகரிகோள் விடுத்தானே ,, 5. 1. 9

மதயானைகோள் விடுத்தாய் — நாச். தி. 2. 3

மதமொழுகுவாரணம் உய்யவளித்த-எம்அழகனூர் ,, 4. 10

பருந்தாள் களிற்றுக்கருள் செய்த
பரமன்றன்னைப் பரின்மேல்
விருந்தாவனத்தே கண்டமை ,, 14. 10

ஒரு தனிவேழத்தரந்தையை ஒருநாளிருநீர்மடுவுள் தீர்த்தனை
தி. எ. கூ.

போரானைபொய்கைவாய்க் கோட்பட்டு நின்றலறி...
தீராத சீற்றத்தாற் சென்றிரண்டு கூறுக
ஈராவதனையிடர்கடிந்தானெம்பெருமான் சி. தி. ம

ஓரானை கொம்பொசித் தோரானை கோள்விடுத்த
சீரானை ,,

பூந்தண்புனல் பொய்கையானை யிடர்கடிந்த நம். 2. 8. 2

கைம்மா துன்பம் கடிந்தபிரானே 2. 9. 1

தொழுங்காதல் களிறளிப்பான் புள்ளூர்ந்து
தோன்றினையே ,, 3. 1. 9

பொய்கை முதலைச் சிறைப்பட்டு நின்ற
கைம்மாவுக்கருள் செய்த கார்முகில்போல் வண்ணன்
கண்ணன் ,, 3. 5. 1

கைம்மா துன்பொழித்தாயென்று கைதலை பூசலிட்டே
,, 5. 1. 7

அன்றி மற்றொன்றிலம் நின்சரணேயென்று
அகலிரும் பொய்கையின் வாய் நின்று தன்
நீள்கழலேத்திய ஆனையின் நெஞ்சிடர்தீர்த்தபிரான்
,, 7. 10. 8

பெருந்தாட்களிற்றுக்கு அருள் செய்த பெருமான்
கவளமாகளிற்றினிடர் கெடத்தடத்துக் காய்ச்சினப்
பறவை யூர்ந்தானே ,, 9. 2. 5

திண்கைம்மா துயர் தீர்த்தவன் கலி, 1. 8. 5

மீனமர் பொய்கை நாண்மலர் கொய்வான்...
கானமர் வேழம் கையெடுத்தலறக் கராவதன்
காலினைக்கதுவ ஆனையின் துயரம் தீரப் புள்ளூர்ந்து
சென்று நின்றாழி தொட்டானை ,, 2. 3. 9

காரானையிடர் கடிந்த கற்பகத்தை கலி. 2. 5. 1

தூம்புடைத்திண் கை வன்தாள் களிற்றின்
துயர் தீர்த்து கலி. 2. 9. 5

கொழுந்தலரும் மலர்ச்சோலைக் குழாங்கள்
பொய்கைக்கோள் முதலை வாளெயிற்றுக்
கொண்டற்கெள்கி
அழுந்திய மாகளிற்றினுக்கன்றாழியேந்தி
அந்தரமே வரத்தோன்றி யருள்செய்தானை ,, 2. 10. 3

வாரணங்கொளிடர் கடிந்தமாலை ,, 2. 10. 11

முதலைத் தனிமா முரண்தீரவன்று—முதுநீர்த்தடத்துச்
செங்கண் வேழமுய்ய
விதலைத்தலைச் சென்றதற்கே யுதவி
வினைதீர்த்தவம்மான் ,, 3. 8. 2

கொலைப்புண்டலைக்குன்றமொன்றுய்ய வன்று
கொடுமாமுதலைக்கிடர் செய்து—கொங்காரிலைப்புண்ட
ரீகத்தவளின்பமன்போடணைந்திட்டவம்மான் ,, 3. 8. 3

கதநாகங்காத்தளித்த ,, 4. 4. 1

தூம்புடைப்பணைக்கை வேழம் துயர் கெடுத்தருளி
,, 4. 5. 1

தாவளந்துலகமுற்றும் தடமலர் பொய்கைபுக்கு
நாவளநவின்றங்கேத்த நாகத்தின் நடுக்கந்-
தீர்த்தாய் ,, 4 6. 1

பொன்னிக்கரத்த போதகத்தின் துன்பந்தவிர்த்த
புனிதன் ,, 5. 1. 2

உலகில் சூழிமால் யானைத் துயர்கெடுத்து ,, 5. 7. 8

கடிகொள் பூம்பொழில் காமருபொய்கை வைகு
தாமரை வாங்கியவேழம்
முடியும் வண்ணமோர் முழுவலிமுதலை பற்ற மற்றது
நின்சரண்நினைப்ப

